ஸ்ரீ:

# ஸ்ரீ அழகியசிங்கரின் உபதேசம்

[ஸ்ரீ உப, வித்வான் பனமுகை வீ. நரஸிம்மாசாரியர் ஸ்வாமி, சிரோமணி,
ஆராதகர் ஸ்ரீ அஹோபில மடம்.]

நித்யம் செய்யவேண்டிய காரியங்களைச் செய்யவேண்டிய க்ரமங்களுடன் செய்யும் விதங்களுடன் சொல்லுகிற க்ரந்தத்தை நித்யமென்று வ்யவஹரித்து வந்தாலும் ஆஹ்நிக க்ரந்தமென்று சொல்லுகிறார்கள். ஆஹ்நிகமென்றால் அஹ்நிபவம் ஸச்சரித்ரம். அஹ்நி என்பதற்கு பகல் மட்டும் அர்த்தமில்லை. நாள் என்று பொருள் கொள்ளவேணும். இதற்கு ஸ்ரீ வைஷ்ணவ ஸதாசார நிர்ணயமென்றும், ஸச்சரித்ரஸுதாநிதி என்றும் ஸ்பஷ்டமாகவும் பெயர் சொல்லுகிறார்கள். ப்ரமாணம் காட்டவேண்டியதுகளுக்கு ப்ரமாணங்களையும், மந்த்ரத்துடன் செய்யவேண்டியதுகளுக்கு மந்த்ரங்களையும் விவரித்துக் காட்டுகிறது ஆஹ்நிகக்ரந்தம். அப்படிப்பட்ட ஆஹ்நிகக்ரந்தத்தில் ஆசார்யர்கள் அருளிச்செய்யப்பட்ட க்ரந்தத்துக்கு ஏற்றம் உண்டு. ஆகையால் அதையே க்ரந்தசதுஷ்டயம் போல் முதலில் ஆசார்ய ஸந்நிதியில் காலக்ஷேபம் பண்ணும் வழக்கமும் இருக்கிறது. ஸ்ரீபாஷ்யகாரர் அருளிச்செய்த ஒன்பது க்ரந்தத்தில் ஒன்றான நித்யக்ரந்தத்தில ஆஹ்நிக க்ரந்தங்களில் சொல்லப்பட்டிருக்கும் எல்லா விஷயங்களும் க்ரமமாகவும், பூர்ணமாகவுமில்லாதிருப்பதால் அதில் சில பாகம் லுப்தம் என்றும் சொல்லுகிறார்கள்.

மந்த்ரங்களும். தந்த்ரங்களும் உபதேசத்தினால் தெரிந்துகொண்டு ஆவ்ருத்தி செய்து முகஸ்தமாக வைத்துக்கொண்டு அனுஷ்டிக்க வேண்டியவைகள். அந்த கார்யங்களுக்கு ப்ரமாணங்களையும் அதில் எழும் சர்ச்சைகளையும் அதன்மேல் நிர்ணயங்களையும் தெரிந்துகொள்ள வேண்டிய அவசியம் வித்வான்களுக்கு ஏற்படக்கூடியதானாலும் அவைகளை அனுஷ்டிக்க வேணுமென்று ச்ரத்தையுள்ள யாவருக்கும் ஆசார்யர்கள் அருளிச் செய்தபடியே நாம் செய்துவருவோம் என்கிற உறுதியே போதும். ச்ருதிஸ்ம்ருதிசரணரான நம் முன்னோர்கள் சிறந்தது என்று நமக்கு உபதேசித்ததை நாம் கைப்பற்றி அனுஷ்டிப்பதில் நமக்கு வருவதொரு தப்பில்லை யென்றுதான் பெரியோர்களின் வார்த்தை. நாம் நித்யம் செய்யவேண்டிய காரியங்களுக்கு காலத்தை ஐந்து பாகமாகப் பிரித்து வைத்தார்கள். அபிகமனம், உபாதானம், இஜ்யை, ஸ்வாத்யாயம், யோகம் என்று. அதில் செய்யப்படும் முக்ய காரியங்களையிட்டு அந்த காலத்துக்கு அந்த பெயர் கொடுத்திருக்கிறார்கள்.

ஒரு யாமம் என்பது ஏழரை நாழிகை, (மூன்று மணி காலம்) பகல் நான்கு யாமங்கள் ராத்திரி நான்கு யாமங்கள். அதில் ராத்திரி காலத்தில் முதலிலும் பின்னடியும் உள்ள இரண்டு யாமங்களிலும் காரியங்களை வைத்து நடு இரண்டு யாமம் தூங்கும் காலமாய் வைத்து அதை யோககாலத்தில் அடக்கிவிட்டு ராத்திரியினுடைய கடைசி யாமத்தை ப்ராஹ்மமுகூர்த்தம் என்று பெயர் கொடுத்து அதிலிருந்தே செய்யவேண்டிய காரியங்களை கணக்கிடுகிறார்கள். அப்பொழுதே விழித்துக்கொள்ளவேணும். அதாவது ராத்திரி மூன்றுமணிக்கே தூக்கத்தை விட்டுவிடவேணும். ஆஹ்நிகத்தில் சொல்லப்படும் காரியங்கள் ஸ்வஸ்த சரீரமுள்ளவனுக்கு. பொதுவாகவேதான் தர்மசாஸ்த்ரங்கள் அசக்தன் விஷயத்தில் சக்திக்குத் தக்கபடியென்று

தான் சொல்லுகின்றன. சக்தன் அசக்தனுள்ளவனுகக் காட்டிக் கொள்வது முதலியது, ஆத்மவஞ்சனையிலும், ஈச்வர வஞ்சனையிலும் சேரும். அம்மாதிரி விஷயங்களில் பிறரால் ஒன்றும் சொல்லவும், செய்யவும் முடியாது. செய்கிறவனுக்கும் செய்கைக்குப் பலன் கொடுக்கும் ஈச்வரனுக்கும்தான் தெரியும். வஞ்சனையில்லாமல் ருசியுடனும், ச்ரத்தையுடனும், செய்யவேண்டிய காரியங்களுக்கு க்ரமம் மட்டில் ஸங்க்ரஹமாக எழுதுகிறேம்.

மேல் சொல்லப்பட்டபடி பின்மாலையில் தூக்கத்திலிருந்து விழித்துக்கொள்ள வேணும். பகவானுடைய நாமஸங்கீர்த்தனமும், ஸ்மரணமும் வேதாதிகள் ஓதுகிறவர்கள் அதையும் ஓதவேணும். உஷ:காலத்தில் நதி தடாகாதிகளில் ஸ்நாநம் செய்யவேணும். உலர்ந்த வஸ்திரங்களையும், ஊர்த்வபுண்ட்ரங்களையும் தரித்துக்கொண்டு அப்போது குருபரம் பரையையும அனுஸந்தித்துவிட்டு ஸந்த்யாவந்தனுதிகளைச் செய்துவிட்டு, ஔபாஸனம் முதலியதுகளான அக்நியில் செய்யும் காரியங்களையும் செய்துவிட்டு பெரியோர்களையும் பகவானையும் வணங்கவேண்டும், இதுவரையில் அபிகமனம் என்கிற ஒருகாலத்தில் செய்ய வேண்டிய காரியம். பிறகு த்ரவ்யங்களையோ, ஜ்ஞானத்தையோ ஸம்பாதிப்பது உபாதான காலமென்கிற இரண்டாவது காலத்தில்செய்யும் காரியம்.

பிறகு மாத்யாஹ்நிகஸ்நானம் செய்து மாத்யாஹ்நிகம் செய்து பகவதாராதனமும் செய்து வைச்வதேவாதிகளைச் செய்து அந்த அன்னத்தை புஜிப்பது வரையில் மூன்ருவது காலமான இஜ்யையின் காரியம். பிறகு ஸாயங்காலம் ஸந்த்யாவந்தனகாலம் வரையில் வேத சாஸ்திரபுராணுதிகளை பரிசீலிப்பதும், குடும்பகார்யங்களைக் கவனிப்பதும் நான்காவது கால மான ஸ்வாத்யாயகாலத்தில் செய்யும் காரியங்கள். ஸாயம் ஸந்த்யாவந்தனத்தைச்செய்து அக்நியில் செய்யவேண்டிய காரியத்தையும், பகவத்பூஜை நிவேதநம் இவைகளையும்செய்து அந்த அன்னத்தை புஜித்துவிட்டு சாஸ்த்ரமனனம் பண்ணிவிட்டு பகவானை த்யானித்துக் கொண்டு தூங்குதல் ஐந்தாவது காலமான யோக காலத்தில் செய்யும் காரியங்கள்.

இதுதான் தினந்தோறும் செய்யவேண்டிய ஸச்சரித்ரம் தேசிகப்ரபந்தத்தில் ஸ்ரீதேசிகன் ஸ்ரீவைஷ்ணவதினசரி என்கிற ப்ரபந்தப் பாட்டுக்களாலே அவைகளை ஸங்க்ரஹித்து அருளினர்.

ஆகவே எல்லா ஆசார்யர்களும் ஸதாசாரம் அவசிய மனுஷ்டிக்கப்படவேணுமென்று எண்ணத்தினுல் ஸங்க்ரஹமாகவோ, ச்லோகரூபமாகவோ, பாட்டுக்கள் ரூபமாகவோ அருளிச் செய்திருக்கிறர்கள்.

பிம்மாலையில் எழுந்திருக்கும்போது ஹரிர் ஹரி: என்றமாதிரி ஹரிநாமத்தை எழுதரம் சொல்லிக்கொண்டே எழுந்திருந்து ஆசமனத்தை முக்யமாகவோ, கௌணமாகவோ செய்துவிட்டு, பெருமாள் கஜேந்த்ரரக்ஷணம் பண்ணின ப்ரகாரத்தை அனுஸந்தானம்செய்து, தன்னுடைய ஹிதத்தைச் சிந்திக்கும்போது நடந்த காலங்களில் தான் ஸரியில்லாததை நினைத்து வருந்தி இனியாவது ஸரியாக இருக்கவேணுமென்று உத்ஸாஹத்தோடு அந்தமாதிரி இருக்கும்படி அனுக்ரஹிக்கவேணும் என்று பெருமாளை ப்ரார்த்தித்துக்கொண்டு பெருமாள் விஷயமான தனக்கு தெரிந்த ஸ்தோத்ரத்தையோ, அல்லது பெருமாள் நாமங்களையோ அனுஸந்தானம் செய்து வேதம், அருளிச்செயல்கள் இவைகளில் தான் கற்கவேண்டியதையோ, கற்றதுகளையோ தன் சக்திக் கேற்றபடி ஆவ்ருத்தி செய்துவிட்டு, உஷ:காலம் வந்தவாறே நதீதடாகாதிகள் இருக்குமிடம் (அங்கேயே ஜபாதிகள் செய்ய ஸௌசர்யங்க

ளிருக்குமானால் திருப்பக்குடலை, மடிஸஞ்சி முதலியதுகளுடனே) போய் அவைகளைச் சுத்தமான இடத்தில் வைத்துவிட்டு ஜலமலவிஸர்ஜனம் செய்யவேண்டியிருந்தால் அதை செய்துவிட்டு சௌசாதிகளை தன் ஆச்ரமத்திற்கு அனுகுணமாகச் செய்துவிட்டு கண்டூஷம், ஆசமனம் செய்து, பல் தேய்த்து விட்டு மறுபடி ஆசமனம் செய்து திதிவார நக்ஷத்திரங்களைச் சொல்லி ஸங்கல்பம் பண்ணிக்கொண்டு ஸ்நாநம் செய்து ஸ்நாநாங்கதர்ப்பணமும் செய்யவேணும். ஸ்நாநமந்திரங்கள் பூர்ணமாகத் தெரியாவிட்டாலும் திருவஷ்டாக்ஷரத்தையாவது அனுஸந்தித்து கங்கையை த்யாநித்துக்கொண்டு ஸ்நாநம் செய்யவேணும். கீழ்சொன்னவைகளுக்கும் மேல் சொல்லப் போகிறதற்கும் ஆஹ்நிகாதிகளில் மந்திரங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. அவைகளைத் தெரிந்துகொண்டு அந்தப்படி செய்யவேண்டியது அவசியமானாலும் பொதுவாக அவைகளின் முக்யமான க்ரமமும் அதன் நோக்கங்களும் மட்டுமே அதில் ருசி பிறந்து அவைகளை அப்யஸித்துச் செய்யவேண்டுமென்கிற த்வரை உண்டாகுவதற்காகவே எழுதப்படுகிறது. பிறகு உலர்ந்த வஸ்திரங்களை உடுத்திக்கொண்டு கேசவாதி நாமங்களைச் சொல்லி ஊர்த்வ புண்ட்ரங்களைத் தரித்துக்கொண்டு ஆசார்யர்களின் தனியன்களை அநுஸந்தித்துவிட்டு ஸந்த்யாவந்தனம் பண்ணி காயத்ரீ ஜபம் செய்து திருவஷ்டாக்ஷரத்தையும் தத்துல்யமாக ஜபம் செய்து உபஸ்தானம் செய்யவேணும்.

ப்ராஹ்மணனுக்கு (த்ரைவர்ணிகர்களுக்கு என்றுகூடச் சொல்லலாம்) எல்லா ஸம்ஸ்காரங்களும் மந்திரத்துடனேயே நடப்பதால் சௌளம் என்கிற குடுமி வைத்துக்கொள்ளுதல் உபநயனத்திற்கு முந்தின கார்யமாகையால் அந்த குடுமி இல்லாமல்போனால் உபநயநம் ஸித்திக்காது; உபநயநமில்லாமல் போனால் ப்ராஹ்மண்யம் ஏற்படமாட்டாது. ஆகையால் குடுமி யஜ்ஞோபவீதம் ஸந்த்யாவந்தனம் ப்ராஹ்மணனுக்கு அவசியம் வேண்டியவைகள். அப்படியே ஸ்ரீவைஷ்ணவனுக்குப் பஞ்சஸம்ஸ்காரம் என்று சொல்லப்படுகிற ஸமாச்ரயணம் அவசியம் வேண்டியவை. இவைகள் ஆசார்யர்களால் செய்யப்படவேண்டியவைகள். விஷ்ணுவைச் சேர்ந்தவன் என்பது வ்யக்தமாகைக்காக பகவானுடைய அங்கசக்ரங்களைத் தாபம் செய்து மந்த்ரபூர்வகமாக தரிப்பித்தல் முதல் ஸம்ஸ்காரம். இரண்டாவது, நம்முடைய தேகத்தில் பன்னிரண்டு திருமண்காப்புகளைத் தரிப்பித்தல்; மூன்றுவது தாஸ்யநாமம். நாலாவது மந்திரத்தை உபதேசிப்பது. ஐந்தாவது பகவதாராதனத்தை உபதேசிப்பது. இவ்வளவும் செய்தபிறகு இவன் ஸ்ரீ வைஷ்ணவனாகிறான். அந்த ஸம்ஸ்காரங்களில் மற்றுள்ள நாலு ஸம்ஸ்காரங்கள் செய்யப்பட்டதை அனுஸரித்து அவை நான்கையும் தினம் தானே செய்து வரவேண்டியது அவசியமாகையால் பன்னிருநாமங்களையும் தரித்து தாஸ்யநாமத்தையும் அனுஸந்தித்துக்கொண்டு ப்ராஹ்மண்ய நிமித்தமாக காயத்ரீஜபம் செய்வதுபோல் ஸ்ரீ வைஷ்ணவ நிமித்தமாக திருவஷ்டாக்ஷரஜபத்தையும் அப்போதே செய்துவிட்டு உபஸ்தானத்திற்குப் பிறகு அஷ்டாக்ஷரத்தையும் மீதி உபதிஷ்டமந்திரங்களை ஜபம் செய்யவேணும். பிறகு ஆதார சக்த்யாதி தர்ப்பணம், தேவர்ஷி காண்டர்ஷி பித்ருதர்ப்பணம், ப்ரஹ்மயக்ஞம் இவைகளை முடித்துக்கொண்டு, பெரியவர்களை வணங்கிவிட்டு கிருஹத்திற்கு வந்து அக்நியாதி கார்யங்களைச் செய்து பெருமாளையும் யதாசக்தி ஆராதிக்கவேணும். இதுவரையில் அபிகமனம். பிறகு உபாதாநாதி காலங்களில் செய்யவேண்டியதைச் செய்யவேணும்.

ஆனால் இக்காலத்தில் அநேகமாக எல்லோரும் பத்து மணிக்குமேல் போகாமலேயே அதற்குள்ளாகவே தங்கள் ஜீவனோபாயத்துக்குப் போகவேண்டிய நிலைமையிலிருக்கிற

படியால் அவர்களுக்கு ஆஹ்நிககார்யங்கள் எப்படி பொருந்தக் கூடும் என்கிற சங்கை உதிக்கக்கூடும். அது நியாயமான சங்கையே. அதற்கு ஸமாதாநம் சொல்லுகிறோம்.

ப்ராஹ்மணனுக்கு ஸேவாவ்ருத்தி முதலியது ஆபத்வ்ருத்தியாகையால் அந்த வ்ருத்தியுள்ளவர்களுக்கு எல்லாவற்றையும் எக்காலத்திலும் முழுவதும் அனுஷ்டிக்க முடியவில்லையே என்கிற காரணத்தினல் எல்லாவற்றையுமே முழுவதுமே விட்டுவிடக்கூடாது. முடிந்த காலத்தில் முடிந்த அளவு அவசியம் அனுஷ்டிக்க வேண்டுமென்பதுதான் பெரியோர்களின் வார்த்தை. க்ஷத்ரியவ்ருத்தியை அவலம்பித்த துரோணச்சாரியருடைய கதையை கவனிக்க வேணும். முக்யமாக ஸ்ரீ கீதையில் எம்பெருமான் தான் சொன்ன அர்த்தத்தில் முதலில் அஸூயை (அதாவது நல்ல குணமுள்ள விஷயத்தில் தோஷாரோபணம் பண்ணுவது) இல்லாமலிருக்கவேணும். அப்படியிருந்தால் அது காலக்ரமத்தில் அதில் ச்ரத்தையுண்டாகும். அதன்பேரில் அதை அனுஷ்டிக்கவும் முற்படுவன். நித்யமாகவும் அனுஷ்டிப்பன். ஸமஸ்த பாபங்களும் போகும் என்று அருளிச்செய்தபடி ஆஹ்நிககார்யங்களிலும் அதை அனுஷ்டிக்கிறவர்களிடமும் அஸூயையில்லாமலிருந்தாலேயே தன்னடையே ச்ரத்தை முதலியதுகள் ஸம்பவிக்கும். இந்த க்ரமத்தில் தன்னல் முடிந்த அளவு முடிந்த காலத்தில் முடிந்ததைச் செய்யலாம். இதுவரை சொன்ன அபிகமன க்ருத்யங்கள் அநேகமாக எல்லோராலும் எப்பொழுதும் அனுஷ்டிக்கக் கூடியவைகளே. சுருங்கச்சொல்லில் பிம்மாலே எழுந்திருந்து பல் தேய்த்து ஸ்நாநம் செய்து பன்னிரு திருநாமம் தரித்து ஸந்த்யாவந்தனதிகளைச்செய்து பெரியோர்களையும் பகவானையும் வணங்குவது முடியாத காரியமில்லை. குறைந்தபக்ஷம் தூங்கி எழுந்ததிலிருந்து ஒரு மணிக்குள் கட்டாயம் இவைகள் செய்து முடிக்கக் கூடியவைகளே. அவைகளை முடித்துக்கொண்டு தன் வ்ருத்தி ஸம்பந்தப்பட்ட காரியங்களை ஏன் கவனிக்க முடியாது. வக்கீல் தொழிலிலிருப்பவர்கள் அந்த ஒரு மணிக்குப் பிறகு கக்ஷிக்காரர்களிடம் பேசக்கூடாதா? வியாபாரம் செய்கிறவர்களும் பிறகு செய்யக்கூடாதா? இம்மாதிரியே எல்லாத் தொழிலிலுள்ளவர்களும் செய்யலாம். முன் சொன்னமாதிரி இதில் அசூயை ஏற்படாமலிருந்தாலேயே ரொம்ப சீக்கிரத்தில் ச்ரத்தை ஏற்பட்டு அனுஷ்டிக்கவும் முற்படுவார்கள். கண்ணன் ஸ்ரீகீதையில் சொன்ன வார்த்தை ஒருநாளும் பொய்யாகாது. ஆகவே தன்னுடைய வேலை நாட்களில் அபிகமனம் வரை யதாகாலத்தில் செய்துவிட்டு மேல்செய்ய வேண்டியதை தான் வேலைக்குப் போகவேண்டிய காலத்துக்குத் தக்கபடி முன்னதாகச் செய்துவிட்டு ஸ்வாத்யாயகாலத்தில் செய்யவேண்டியதைச் செய்வதான எண்ணத்துடன் தன் வ்ருத்தியில் ஈடுபட்டுவிட்டு மறுபடி திரும்பி வந்ததும் அந்த காலத்துக்குரியதை அது முதல் செய்வது கௌணனுஷ்டானமாயிருந்தாலும் சாஸ்த்ரம் சொன்னபடி செய்தானகவே அவனைக் கருதலாம். வேலையில்லாத சனி, ஞாயிறு முதலான ஓய்வு நாளில் முக்யானுஷ்டானமும் செய்துவரலாம். ஆகையால் எல்லோராலும் எப்போதும் செய்யவேண்டியதும் செய்யக் கூடியதுமான முக்யமான காரியமாகையால் அபிகமன காலத்தில் செய்யவேண்டியதை வற்புறுத்திச் சொன்னேம்.

ஒரு குடும்பத்தில் ஒருவன் ஸதாசாரயுக்தனயில்லாது துராசாரனக ஆகிவிட்டால் அவன் கெட்டுப் போனதுமல்லாமல் அவனிடமிருந்து ச்ராத்தாதிகளை எதிர்பார்க்கும் (பித்ரு, பிதாமஹ, ப்ரபிதாமஹர்கள்) தகப்பன், பாட்டன், கொள்ளுப் பாட்டன் இவர்களுக்குக்கூட இழுக்கேற்படுகிறது. இவனல் செய்யும் கிரியைகளை அவர்கள் உகப்பதில்லை. தானவது தன் தகப்பன் ஸதாசாரத்தில் ருசியுள்ளவனக இருந்த காரணத்தால் கொஞ்சநாள்

ஸதாசாரத்தில் இருந்திருக்கக்கூடும். அப்படிக்கில்லாமலிவனிருப்பதால் இவனுடைய துரா சாரம் பிறவி முதலிலேயே இவன் ஸந்ததிக்குப் பரவி விடுகிறது. அத்துடன் நெடுநாளாகப் பரவிவந்த ஸதாசாரத்துக்கும் நம் மதத்திற்கும் இவன் அழிப்பாளனுக ஆகிவிடுகிறுன். ஆக தான் கெட்டு தன் முன்னேர்களையும் பின்னேர்களையும் மதத்தையும் கெடுத்துவிடுகிறுன். உப நிஷத்தில் ஆசார்யன் சிஷ்யனை அனுசாஸிக்கும்போது அநவத்யமான கர்மங்களை அவசியம் செய்யவேண்டுமென்று சொல்லுவதாகச் சொல்லியிருக்கிறது. அதற்கவசியமவன் சொல்ல வேண்டும் என்று விதியில்கூட தாத்பர்யம். தவிர தன்னை ப்ராஹ்மணன், ஸ்ரீவைஷ்ணவன் என்று சொல்லிக்கொள்ள ஆசையிருந்தால் மேல்கண்ட காரியங்களைச் செய்துவந்தால் தன்னு டைய மனதிற்கே தான் பிராஹ்மணன் வைஷ்ணவன் என்று சொல்லிக்கொள்வதற்கு ஒத்து நடந்துவருகிறேம் என்ற திருப்தி ஏற்படும். நம் ஆசாரத்தின் பெருமை பிறருக்கு நம்மை ஒளிக்காமல் பிரகாசிக்கும்படிக் காட்டிக்கொள்வதே நோக்கமுள்ளதாகவிருக்கிறது. பொருள் தேடுவதற்காக நம்மை நாம் மறைத்துக்கொண்டோமாகில் நாம் திருடராகவும் திருட்டுத் தொழில் செய்கிறவர்களாகவுமே ஆய்விடும். குடுமி வைத்துக்கொள்வதால் நாம் புனிதமான பாரததேசத்தினர் என்பதையும் திலகம் முதலியதுகளை அணிவதால் இந்த வர்ணத்தினர் என் றும், உடையணியும் ப்ரகாரத்தால் இன்ன ஆச்ரமத்தான் என்றும் நாம் காட்டிக்கொடுக்கி றேம். இப்படி நாம் பெருமைப் பட்டுக்கொள்ளவேண்டிய ஆசாரத்தை அனுஷ்டிப்பது நமக்குக் குறைவைக் கொடுக்குமென்று எண்ணுவது ரொம்பப் பேதைமையே. ஆகை யால் நம்முடைய பூர்வர்களின் ஆசாரத்தை நம்மால் முடிந்த அளவு ஆத்மவஞ்சனை பண்ணு மல் செய்யவேண்டியது அவசியம்.

ஸ்ரீவைஷ்ணவன் என்றல் விஷ்ணு தாஸனென்று அர்த்தமாகையால் தாஸனுக்கு ஸ்வாமியின் ஸேவை முக்கியமாகையால் அஹோராத்ரக்ருத்யத்தில் பகவதாராதனம் முக்ய மாகையால் அதை அவசியம் செய்யவேண்டும். பஞ்சஸம்ஸ்காரத்தில் ஐந்தாவது ஸம்ஸ் காரமாக உபதேசிக்கப்பட்டபடியால் அதை விஸ்தாரமாக உபதேசிக்கப்பட்டபடியால் அதை விஸ்தாரமாக ஆஹ்நிகத்தில் சொல்லியபடி செய்ய அவகாசாதிகள் இல்லாமல் போனலும் காலத்திற்கேற்ப மூலமந்த்ராதிகளைக் கொண்டாவது செய்து முடிக்கலாம். அவகாசம் உள் ளபோது அதற்குத் தக்கபடி விஸ்தாரமாயும் செய்யலாம்.

இப்படியாக நாம் எம்பெருமானின் அடிமையென்றும் அவனுல் விதிக்கப்பட்ட சாஸ்த்ரானுஷ்டானம் பண்ணுவது அவனுக்கு ப்ரீதியை விளைவிக்கும் (அதனுலேயே ஸ்ரீ பகவதாஜ்ஞயா ஸ்ரீமந்நாராயணப்ரீத்யர்த்தம் என்று ஒவ்வொன்றுக்கும் ஸங்கல்பம் செய்து கொள்ளப்படுகிறது) என்கிற எண்ணத்தினுல் தன் வர்ணுச்ரமத்திற்கு ஏற்பட்ட கர்மங்களை விடாமல் யதாசக்தி அனுஷ்டித்துவந்தால் இங்கேயும் பெருமையுடன் வாழ்ந்து மோக்ஷோபா யாதிகளையும் அனுஷ்டித்து முக்தாநந்தத்தையும் அனுபவிக்கும்படியான நன்மைகள் உண்டா கும.

'𑌸𑌰𑍍𑌵𑌾𑌗𑌮𑌾𑌨𑌾𑌮𑌾𑌚𑌾𑌰𑌃 𑌪𑍍𑌰𑌥𑌮𑌃 𑌪𑌰𑌿𑌕𑌲𑍍𑌪𑌤𑍇 । 𑌆𑌚𑌾𑌰𑌪𑍍𑌰𑌭𑌵𑍋 𑌧𑌰𑍍𑌮𑌃 𑌧𑌰𑍍𑌮𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌭𑍁𑌰𑌚𑍍𑌯𑍁𑌤𑌃'

(ஸர்வாகமங்களுக்கும் ஆசாரம்தான் முக்யமானது. அதில் ஸதாசாரம் உயர்ந்தது. அந்த தர்மத்துக்குத்தான் (ஈச்வரன்) அச்யுதன் பலமளிக்கிறுன்' என்று ஆசாரத்தின் மஹிமையை உணரவேண்டியே இதை ஸஹஸ்ரநாமபாராயணங்களில் சேர்த்து அனுஸந்திக்கிறுர்கள்.

கிருஹஸ்தாச்ரமம் எல்லா ஆச்ரமத்தினராலும் உபஜீவிக்கப்படுவதால் கிருஹஸ்தாச்ரமத்தின் தர்மங்கள்தான் முதலில் ஆஹ்நிகாதிகளில் சொல்லப்பட்டதாலும் பிறகு மற்ற ஆச்ரமங்களின் தர்மங்களும், அநுபநீதர்களுக்கும் ஸ்த்ரீகளுக்கும் செய்யவேண்டிய தர்மமும் சொல்லப்பட்டிருக்கின்றன. அதில் ஸ்த்ரீதர்மமும் அனுபநீததர்மமும் தகப்பனாலும், பர்த்தாவினாலும் அவர்களுக்கு எடுத்துச் சொல்லப்பட்டு அனுஷ்டிக்கும்படிச் செய்யவேண்டியவைகள். வயது வந்து புத்தியுள்ளவர்கள் தாங்களாகவும் தெரிந்துகொண்டு அனுஷ்டிக்கலாம். முக்யமாக ஸ்த்ரீகளுடைய பராமரிப்பினால் தான் ஆண்பெண் குழந்தைகளுக்கு குணங்கள் ஏற்படுவதால் அநேகமாக ஐந்து வயது வரையில் தாயுடனேயே குழந்தைகள் பழகிவருவதால் தாய்மார்களும் குழந்தைகளைப் போஷிக்கும் மற்றஸ்த்ரீகளும் கவனிக்க வேண்டியதை மட்டில் குறிப்பிடுகிறோம்.

ஸதாசாரத்தில் ச்ரத்தையுள்ள ஸ்த்ரீசுமங்கலிகள் ப்ரதிதினம் சிரஸ்நானம் செய்ய வேண்டுமென்ற நிர்ப்பந்தமில்லை. (இதனால் புருஷனுக்கு இது அவசியம் என்றே ஏற்படுகிறது) விசேஷ தினங்களில் சிரஸ்நானம் செய்துகொண்டு மற்ற தினங்களில் மஞ்சள் நீரால் (தீர்த்தத்தால்) சிரஸ்ஸில் ஹரி: ஹரி॥ என்று ப்ரோக்ஷித்துக்கொண்டு கண்டஸ்நானம் செய்து அர்த்தசந்த்ராகாரமாகத் திருமணையும், ஸ்ரீசூர்ணத்தை தீபரேகாகாரமாயும் இட்டுக்கொண்டு தனியனை அனுஸந்தித்துவிட்டு ஸமாச்ரயணகாலத்தில் தனக்கு உபதிஷ்டமான மந்த்ரங்களை பத்து ஆவ்ருத்தி ஜபித்து மாமனார், மாமியார் முதலிய பெரியவர்களை வணங்கிவிட்டு, பெருமாள் ஸந்நிதியையும், பெருமாள் படங்கள் உள்ள இடத்தையும் மெழுகி, கோலம் முதலியதுகளால் அலங்கரித்து வணங்கி தன்னுடைய குழந்தைகளுக்கு பல் தேய்த்து ஸ்நாநம் செய்வித்து நல்ல துணியை உடுத்தி திருமண் இட்டு பெருமாளை ஸேவிக்கச்சொல்லி என்னைக் காப்பாற்ற வேணும் என்று சொல்லச்சொல்லவேணும். இம்மாதிரி பழக்கினால் தெய்வபக்தியும், ஸதாசாரருசியும் அவர்களுக்கு அபிவ்ருத்தியாகும். புருஷக்குழந்தைகளுக்கு ஒருநாளும் கிராப் வைக்கக் கூடாது. வைத்துக்கொள்ள இடம் கொடுக்கக் கூடாது. அம்மாதிரி பெண் குழந்தைகளுக்கு இரட்டைப் பின்னல், கோணவகிடு இதற்கும இடம் கொடுக்கக் கூடாது. பழைமையான உடையையே அணியும்படிச் செய்யவேணும். கல்யாணமான பெண்கள் வீட்டு விலக்குக் காலம் தவிர மற்றநாளில் முன்னோர் வழக்கப்படி வலமேலாக்கோ இடமேலாக்கோ அணிந்துகொண்டு கச்சத்துடன் (மடிஸார் என்று வழங்கும்) இருக்கவேணும். கொசான்கள் உடுத்திக்கொள்ளக்கூடாது. இந்த மாதிரி தானும் ஸதாசாரத்துடன் இருந்து தன் குழந்தைகளையும் நல்ல பழக்கத்துடன் கொண்டுவந்தால் தனக்கும், தன்குடும்பத்துக்கும், தான் பெற்ற குழந்தைகளுக்கும் பர்த்தாவுக்கும் நன்மையை செய்தவளாகுவதோடு தர்மத்தையும் வளர்த்தவளாகவும் ஆவாள். ஸ்த்ரீகள் கெட்டுவிட்டால் தடுக்கமுடியாதபடி அதர்மம் வளர்ந்துவிடும் என்று சொல்லப்படுகிறது. ஆகையால் ஸ்த்ரீகள் அவசியம் ஸதாசாரத்துடன் இருக்கவேண்டும்.

ஸ்ரீ அழகியசிங்கரால் அவ்வப்போது மந்த்ராத்யுபதேசகாலத்திலும் தனிப்பட்டவர்களுக்கு ஹிதம் சொல்லும்போதும் விஸ்தாரமாக ஸாதிக்கப்பட்ட விஷயங்களை ஸங்கிபூதர்களுக்கு விஷயத்தின் சீர்மையையும் அவச்யத்தையும் உத்தேசித்து குறித்து வைத்திருந்ததை வெளியிட வேண்டுமென்கிற அபி ஸந்தியில் சுருக்கமாக வெளியிடப்பட்டது.